Regd : No. TN - MS C/ 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS Phone 420212 4 பக்கம் விலை 50 காசு
POST WITHOUT PRE PAYMENT LICENCE NO G 6 - TN MS C/ P. P 55



**எதுமுக்கியம்**

உடைமாறுவது முக்கியமல்ல, உள்ளம் மாறுவதும், உயர்ந்த கருத்துக்கள் உள்ளத்தில் பதிவதும் தான் முக்கியம்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

**நிறுவனர்: எம்.ஜி.ஆர்**

**அறிவாளி**

அறிவாளிக்கு - இயற்கையை உணர்ந்தவனுக்குத் துன்பமே வராது.

-தந்தை பெரியார்



மலர்: 8 சென்னை 5 - 10 - 1984 வெள்ளி ** வெளியீடு 6 - 10 - 1984 சனி இதழ் 348

# சென்னை அருகே அமைக்கப்படும் வரியற்ற வர்த்தக பகுதியில் தொழில் தொடங்க பேரார்வம்

# 4 ஆயிரம் மனுக்கள் குவிந்தன

## தலைமைச் செயலாளர் பேட்டி

**சென்னை, அக். 5- சென்னைக்கு அருகே, அமைக்கப்படும் வரியற்ற வர்த்தக மண்டலப் பகுதியில் தொழில்கள் தொடங்க அனுமதி கோரி 4 ஆயிரம் மனுக்கள் வந்துள்ளன. இந்த மனுககளை பரிசீலிக்க குழு அமைக்கப்பட்டுள்ளதாக தலைமைச செயலாளர் கே. சொக்கலிங்கம் தெரிவித்துள்ளார்.**

அரசு தலைமைச் செயலாளர் சொக்கலிங்கம் நிருபர்களிடம் கூறியதாவது:-

தமிழகம் முழுவதும் நல்ல மழை பெய்துள்ளது. இந்த மழையினால் புன்செய் பயிர்சாகுபடி அதிக அளவில் இருக்கும்.

மழை காரணமாகஒரு இடங்களில் நெல் அறுவடை பாதிக்கப்பட்டாலும் பெரிய அளவில் பாதிப்பு இல்லை.

தமிழ் நாடு கிடங்கு கழகம் இந்த ஆண்டு 1 கோடி ரூபாய்க்கு மேல் லாபமீட்டியுள்ளது.

தனது ஊழியர்களுக்கு 20 சதவிகித போனசையும் வழங்கியுள்ளது.

தற்போது 3 லட்சம் மெட்ரிக்டன அளவுக்கு தானியங்களை வைக்கும் அளவு கிடங்கு கழக மையங்கள் உள்ளன. 7-வது ஐந்தாண்டு திட்டத்தில் மேலும் 2 லட்சம் மெட்ரிக் டன் தானியங்களை சேமித்துவைக்கும் அளவுக்கு கட்டிடங்கள் கட்ட திட்டமிடப்பட்டுள்ளது.

### கிடங்கு வசதி

வரியற்ற வர்த்தக மண்டல பகுதியில்கிடங்கு கழகம் கிடங்கு வசதி ஏற்படுத்தித்தர உள்ளது.

கிராமப் புறங்களில் கைப் பம்புகள் போன்றவைகள் இப்போது முழுமையான அளவில் செயலபட ஊரக வளர்ச்சி துறை மூலம்நடவடிக்கைஎடுக்கப்பட்டு வருகிறது.

2 வட்டாரங்களுக்கு ஒரு பம்பு இயக்குபவர் என்ற அளவில் இருக்கிறது. அவருக்கு உதவியாக தற்காலிகமாக ஒருவரை நியமிக்க உத்தேசித்துள்ளோம்.

வரியற்ற வர்த்தக மண்டல பகுதியில் சுற்றுச் சுவர் கட்ட ... செய்யப்பட்டு இதற்காக 40 லட்ச ரூபாய்க்கு அரசு அனுமதி அளித்துள்ளது.

வரியற்ற வர்த்தக மண்டல பகுதியில் ஆரம்ப கட்ட பணிகளுக்காக மைய அரசு 3 கோடி ரூபாய் தருகிறது.

இந்த பகுதியில்தொழில்கள் துவக்க 4 ஆயிரம் மனுக்கள் வந்துள்ளன. மத்திய வணிகத் துறை செயலாளர் தலைமையில் ஒரு குழு அமைக்கப்பட்டு ஆராய்ந்து வருகிறது.

அந்த குழு மனுக்களை பரிசிலித்து அதன் மீது நடவடிக்கை எடுக்கும்.

இவ்வாறு தலைமைச் செயலாளர் சொக்கலிங்கம் கூறினார்.



### 11-ந் தேதி குழு வருகை

தொழில் தொடங்க அனுமது கோரி வந்துள்ள மனுக்களை பரிசீலிக்க மததிய அரசின் குழு 11-ந் தேதி சென்னை வருகிறது.

தொழில் தொடங்க ஏராளமான வெளிநாட்டினரும் மனு செய்துள்ளனர்

இந்த வரியற்றவர்த்தக மண்டலத்தில் உற்பததியாகும பொருடகள் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படும்.

---

**அண்ணா பவள விழா:**

## காவல்துறை பாதுகாப்பு ஏற்பாடுகள்

**சென்னை, அக். 5- சென்னைநகரில் நடைபெறஉள்ள அண்ணா பவளவிழாவினை ஒட்டி தக்க பாதுகாப்பு ஏற்பாடுகளை போலீசார் செய்து வருகின்றனர் என்று கமிஷனர் ஸ்ரீபால் கூறினார்.**

7ம் தேதியன்று சென்னை நகரில் கழகத்தின் சார்பில் அண்ணா பவள விழா பேரணியும் சீரணி அரங்கில் பொதுக் கூட்டமும் நடைபெற உள்ளது.

இந்தப் பேரணியில் பங்கேற்கும் ஆயிரக்கணக்கான வாகனங்களில் லட்சக்கணக்கில் கழகத்தோழர்களும் வர உள்ளனர்.

இந்த பேரணி பொதுக்கூட்ட நேரத்தில் சிறப்பான முறையில் பாதுகாப்பு ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருவதாக கமிஷனர் ஸ்ரீபால் நிருபர்களிடம் கூறினார்.

பாதுகாப்புக்கு கூடுதலாக போலீசாருக்கும் ஏற்பாடு செய்யப்படும்.

ஊர்வலத்தில் வரும் பஸ்கள், வேன்கள் கடற்கரையில் ஒரு பக்கமாக நிறுத்த அனுமதிக்கப்படும்.

சீரணி நுழை வாயிலில் எந்த வாகனமும் நிறுத்த அனுமதிக்கப்பட மாட்டாது என்று கமிஷனர் ஸ்ரீபால் கூறினார்.

## ஜனாதிபதி ஜெயில்சிங்- முதல்வர் ராமராவ் சந்திப்பு

புதுடெல்லி, அக். 5— ஆந்திர முதல் அமைச்சர் என். டி. ராமராவ் இன்று காலை ஜனாதிபதி ஜெயில்சிங்கை அவரது மாளிகையில் சந்தித்து பேசினார் இந்த சந்திப்பு சுமார் 10 நிமிட நேரம் நீடித்தது.

## உல்லாச வாழ்க்கைக்கு கார்கள் திருட்டு: 3 பேர் கைது

சென்னை, அக். 5— கார்களைத் திருடி விற்றதாக 3 பேர் கைது செய்யப்பட்டனர், அவர்கள் கொடுத்ததகவலின்பேரில் 3 கார்கள் கைப்பற்றப்பட்டன.

இதுபற்றி போலீஸ்தரப்பில் கூறப்படுவதாவது!

சென்னையில்அமெரிக்க நிறுவனம் ஒன்றில்வேலை பார்க்கும் விஸ்வேஸ்வரன் என்பவர் கடற்கரையில் காந்தி சிலை அருகே நிறுத்தி வைத்திருந்த கார் திருடு போய்விட்டதாக போலீசில் புகார் செய்தார்.

லாயிட்ஸ் காலனியில் வசிக்கும் ஒருவரும் தன்னுடைய கார்திருடு போய் விட்டதாக புகார் செய்தார்.

இவ்வாறு அடிக்கடி கார் திருடு போவதை கண்டு பிடிக்க தனி போலீஸ் படையை சென்னை நகர் போலீஸ் கமிஷனர் ஸ்ரீபால் அமைத்தார்.

அவர்கள் தீவிர புலன் விசாரணை நடத்தி 3 பேரை கைது செய்தனர்.

கைது செய்யப்பட்டவர்கள் பெயர் விவரம் வருமாறு:-

சந்திரமோகன் (வயது 26) அப்பாதுரை (வயது 25) இவர்கள் இருவரும் திருநெல்வேலியை சேர்ந்தவர்கள் கோதண்டராம ரெட்டி சென்னையில் வசிப்பவர்,

இவர்கள் காரைத் திருடியதும் நம்பர் பிளேட்டைமாற்றி வெளியூர்களுக்கு கொண்டு சென்று விற்று விடுவார்களாம். அங்கிருந்து கார்களைத் திருடி வந்து சென்னையில் விற்பார்களாம்.

கிடைக்கும் பணத்தைக் கொண்டு உல்லாச வாழ்க்கை நடத்துவார்களாம்.

நுங்கம்பாக்கத்தில்உள்ள கம்பெனி ஒன்றில் கோதண்டராமரெட்டி டிரைவர் வேலைக்கு அமர்ந்து அந்த கம்பெனியின் 'குளுகுளு' வசதி செய்யப்பட்ட காரைத் திருடி பொள்ளாச்சியில் விற்று விட்டாராம்.

போலீசாரிடம் தாங்கள் பிடிபடக்கூடாது என்று திருச்செந்தூர் கோயிலிலும் அவர்கள் வேண்டிக் கொண்டார்களாம்.

சென்னையில் மட்டுமல்லாமல் கும்பகோணம், பெங்களூர் போன்ற இடங்களிலும அவர்கள் கைவரிசைகாட்டி இருக்கிறார்கள்.

போலீசார் வழக்குபதிவு செய்து மேலும் விசாரணை நடத்தி வருகிறார்கள்.

**அகமதாபாத் கிரிக்கெட்,**

### இந்தியா அபார ஆட்டம்

அகமதாபாத், அக். 5- இந்தியாவுக்கும் ஆஸ்திரேலியாவுக்கும் இடையே இன்று ஒரு நாள் கிரிக்கெட் போட்டி அகமதாபாத்தில் நடந்தது. இடைவேளைக்குமுன்பு இந்தியா 46 ஓவர்களில் 206 ரன்களை எடுத்தது

## "தவப்புதல்வர் ஒருவரைத் தமிழகம் இழந்துவிட்டது"

**ஆர். வி. எஸ் மறைவு குறித்து புரட்சித்தலைவர் இரங்கல் செய்தி**

சென்னை, அக் 5- ஆர். வி. சாமிநாதன் மறைவினால் தமிழகம தனது தவப்புதல்வர்களில் ஒருவரை இழந்துவிட்டது என்று முதல்வர் புரட்சித்தலைவர் தமது இரங்கற் செய்தியில் குறிப்பிட்டுள்ளார்

முன்னாள் மத்திய அமைச்சர் ஆர். வி. சாமிநாதன் இயற்கை எய்தியதைத் தொடர்ந்து அவரது சொந்த ஊரான பாகனேரியில் உள்ள அவரது துணைவியாருக்கு முதல்வர் புரட்சித் தலைவர் இரங்கல் செய்தி அனுப்பி உள்ளார்.

அதில் கூறி இருப்பதாவது:-

தங்களின் கணவர் இறந்து விட்ட துயரமான செய்தி கேட்டு அதிர்ச்சி அடைந்தேன்.

சிறந்த விடுதலைப் போராட்ட வீரராகவும், திறமையான சட்டசபையாளராகவும் நல்ல நிர்வாகத் திறமை கொண்டவராகவும் திகழ்ந்த அன்னாரது சேவைகளை தேசம் இழந்துவிட்டது. குறிப்பாகத் தமிழகம் தனது தவப்புதல்வர்களில் ஒருவரை இழந்து தவிக்கிறது

அவரது கண்ணியமான குணநலன்களும், கனிவும் என்றென்றும் நினைவு கூரத்தக்கது.

தங்களின் துயரத்தில் நானும் பங்கு கொண்டு, எனது ஆழ்ந்த இரங்கலைத் தங்களுக்கும் தங்கள் குடும்பத்தினருக்கும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு அந்த இரங்கற் செய்தியில் முதல்வர் புரட்சித தலைவர் குறிப்பிட்டுள்ளார்.

### முதல்வர் சார்பில் அமைச்சர் காளிமுத்து அஞ்சலி

முதல்வர் புரட்சித் தலைவர் சார்பில் அமைச்சர் காளிமுத்து மதுரையில் ஆர். வி. சாமிநாதன் உடலுக்கு மலர் வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினார்.

**செல்வி ஜெயலலிதா எம்.பி. பேச்சு**
(3-ம் பக்கம்)



திருவையில் தியேட்டர் சுவர் இடிந்து ... காயமடைந்தவர்களை அமைச்சர் கோவிந்தன் நேரில் சந்தித்து ஆறுதல் கூறினார்.

## பெருந்தொழிலதிபர்போல்ஆடம்பர நாடகமாடி ரூ. 1 லட்சம் மோசடி செய்த ஆசாமி கைது

சென்னை, அக். 5— பெருந் தொழிலதிபர் போல நடித்து சென்னை கம்பெனியில் ரூ.1லட்சம் மோசடி செய்து அழகிஒருத்தியுடன் ஆடம்பரமாக செலவு செய்து ஊர் சுற்றிய பலே ஆசாமியை சென்னை போலீசார் கைது செய்தனர்.

ரூ. 1 லட்சம் பெறுமானம் உள்ள டைப்ரட்டிங் மெஷின்களையும் போலீசார் பறிமுதல் செய்தனர்.

இந்த பலே ஆசாமியின் மோசடி பற்றிய விவரமாவது:

மதுரை மாவட்டம் தேனியைச் சேர்ந்தவர் ஸ்ரீதரன் (வயது 25). சென்னை அண்ணா நகரில் மாதம் ரூ. 15 ஆயிரம் வாடகைக்கு ஒரு நவீன வசதிகளுடன் கூடிய பங்களா ஒன்றை எடுத்தார். தார்பாலின் விற்பனை செய்வதாக 'பந்தா' பண்ணினார்,

மாதத்துக்கு சுமார் 30 ஆயிரம் வரை மாதச்சம்பளம் கொடுப்பதற்கான அதிகாரிகள், உதவியாளர்களை நியமித்துக் கொண்டார்.

அடுத்தகட்டமாக அண்ணாசாலையில உள்ள ''டைப்ரைட்டிங்'' மெஷின் (தட்டச்சு) கம்பெனிக்குச் சென்றார். தான் ஒரு பெரும் தொழிலதிபர் என்றும் தனக்கு70 டைப்ரைட்டிங் மெஷின்கள் தேவை என்றும் கூறி உடனடியாக 22 மெஷின்களை விலைக்கு வாங்கிக் கொண்டார் ரூ. 1 லட்சத்து 10 ஆயிரத்துக்கு செக் ஒன்றையும் வெட்டினார்.

22 டைப்ரைட்டிங் மெஷின்களையும் ஜார்ஜ் டவுன்சைனாபஜாரில் ஒரு ஆசாமிக்கு 60 ஆயிரம் ரூபாய்க்கு விற்றார். திருவான்மியூரைசசேர்ந்தஒரு அழகி லட்சுமி வயது 21 ஒருத்தியைக் கூட்டிக் கொண்டு திருவனந்தபுரம் மற்றும் ஊட்டி முதலிய பல்வேறு நகரங்களுக்கு ஜாலியாக சென்றார்.

அழகி லட்சுமிக்கு ரூ. 30 ஆயிரம் வரை தங்க நகைகள் பட்டுப்புடவை ஆகியவை வாங்கிக் கொடுத்தாராம்.

இந்தக் கட்டத்தில் டைப்ரட்டிங் கம்பெனிக்குக் கொடுத்த ரூ. 1 லட்சதது 10 ஆயிரத்துக்கான செக் பணமாகாமல்திரும்பி வந்ததைத் தொடர்ந்து கம்பெனி மேலாளர் வரதராஜன் போலீசில புகார் செய்தார்.

மத்தியக் குற்றப் பிரிவு

2-ம் பக்கம் பார்க்க

முன்னாள் மத்திய அமைச்சர்

# ஆர். வி. சாமிநாதன் மறைவு: பாகனேரியில் உடல் தகனம்

சென்னை, அக். 5- சென்னை ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்றுவந்த முன்னாள் மத்திய அமைச்சர் ஆர். வி சாமிநாதன் 13 நாட்களாக உணர்வு திரும்பாமலேயே இருந்து நேற்றிரவு 11 மணிக்கு மரணமடைந்தார். அவரது உடல் சொந்த ஊரான பாகனேரிக்கு கொண்டு செல்லப்பட்டு சனிக்கிழமையன்று தகனம் நடைபெறுகிறது.

கடந்த மாதம் பம்பாய் ஓட்டல் ஒன்றில் சாமிநாதன் தங்கியிருந்தார். அப்போது அவருக்கு திடீரென்று மாரடைப்பு ஏற்பட்டது.

அவரது அறை மூடியிருந்ததால் இதை யாரும் கவனிக்க முடியவில்லை. பின்னர் அவரது அறை உடைக்கப்பட்டு பார்த்தபோது அவர் ஒரு நாற்காலியில் உட்கார்ந்த நிலையிலேயே மயங்கி கிடந்தார்.

உடனடியாக அவர் பம்பாயில் உள்ள ஒரு ஆஸ்பத்திரிக்கு எடுத்து செல்லப்பட்டு தீவிர சிகிச்சை அளிக்கப்பட்டது ஆனால் அவருக்கு உணர்வு திரும்பவில்லை.

இதனால் அவர் கடந்த 25-ந் தேதி சென்னைக்கு விமானம் மூலம் கொண்டு வரப்பட்டு "அப்பல்லோ" ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டார்.

## 13 நாட்கள் மயங்கிய நிலை

கடந்த 13 நாட்களாகவே உணர்வு திரும்பாத நிலையிலேயே அவர் இருந்து வந்தார்.

நேற்று இரவு அவரது உடல் நிலை மோசமானது. மூச்சு திணறல் ஏற்பட்டது. டாக்டர்கள் எவ்வளவோ முயன்றும் பலனளிக்காமல் நேற்று இரவு 11 மணிக்கு ஆர். வி. சாமிநாதன் மரணமடைந்தார்.

உயிர்பிரியும் போது அவருடைய 2 மனைவிகளும், மகன்களும், மகள்களும் உடனிருந்தனர்.

சாமிநாதனின் உடல் ஆஸ்பத்திரியிலிருந்து சென்னை யாகராய நகரிலுள்ள அவர் வீட்டிற்கு எடுத்துச்செல்லப்பட்டது.

தகவல் கிடைத்ததும் நேற்று இரவு சிவாஜி கணேசன் எம்.பி. அவரது மனைவி கமலா அம்மாள சாமிநாதன் வீட்டிற்கு சென்று மலர் வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினர்.

தமிழ்நாடு இந்திரா காங்கிரஸ் தலைவர் பழனியாண்டி துணைத்தலைவர் மாரிமுத்து ஆகியோரும் மரியாதை செலுத்தினர்.

சாமிநாதன் உடல் இரவு 1½ மணிக்கு அவரது சொந்த ஊரான பாகனேரிக்கு கார் மூலம் எடுத்து செல்லப்பட்டது.

வழியில் மதுரை சொக்கிகுளத்திலுள்ள அவரது வீட்டில் 3 மணி நேரம் பொது மக்கள் பார்வைக்காக வைக்கப்படுகிறது.

பிறகு அங்கிருந்து பாகனேரிக்கு எடுத்து செல்லப்பட்டு நாளை சனிக்கிழமை உடல் தகனம் செய்யப்படுகிறது.

## ஓட்டல் கோகுலா திறப்பு விழா

சென்னை, அக். 5— சென்னை பூந்தமல்லி நெடுஞ்சாலையில் உள்ள ஓட்டல் கோகுலா புதுப் பொலிவுடன் மீண்டும் திறக்கப்பட்டது.

சபாநாயகர் ராசாராம் தலைமையில் அமைச்சர் ஆர். எம். வீ. ஓட்டலை திறந்து வைத்தார்.

ஓட்டல் நிர்வாக இயக்குனர் குட்டிமேனன் வரவேற்றுப் பேசினார். பொதுமேலாளர் தாமஸ்லீ நன்றி கூறினார்.

திருச்சியில்

## அண்ணா பவள விழா கூட்டம்

திருச்சி. அக். 5— திருச்சி மாவட்டம் ஆலந்தூர் ஒன்றியம் பிலிமிசையில் அண்ணா பவள விழாக் கூட்டம் அ. பழனிமுத்து தலைமையில் நடைபெற்றது திருச்சி மாவட்ட இணைச் செயலாளர் நல்லுசாமி கழக கொடியினை ஏற்றிவைக்க என். பெருமாள் அண்ணா திருவுருவப் படத்தை திறந்து வைத்தார். இவ் விழாவில் கோட்டம் பாக்கம குமார் கலந்து கொண்டு சிறப்புரை யாற்றினார்.

## நியூசிலாந்து நாட்டு தூதராக ஹில்லாரி நியமனம்

புதுடெல்லி, அக். 5— இந்தியாவுக்கு புதிய நியூசிலாந்து நாட்டு தூதராக சர் எட்மண்ட் ஹில்லாரி நியமிக்கப்பட்டிருப்பதாக அந்நாட்டு பிரதமர் டேவிட்வால்கே அறிவித்தார்.

1953ல் எவரெஸ்ட் மலைசிகரத்தை முதன் முதலாக ஏறி வெற்றி கண்டவர் எட்மண்ட் ஹிலாரி.

இவர் வங்கதேசம், பூட்டான், நேபாளம் ஆகிய நாடுகளுக்கும் நியூசிலாந்து நாட்டு தூதராகவும் பணியாற்றுவார்.

## பஸ் விபத்தில் 12 பேர் காயம்

பெரெய்லி அக். 5— சீக்கிய தீவிரவாதிகளால் கடத்தப்பட்ட பஸ் ஒன்று எதிரே வந்த டிராக்டரில் மோதி பள்ளத்தில் விழுந்தது. இந்தச் சம்பவம் பெரெய்லி அருகே நடந்தது விபத்தில் 12 பேர் காயம் அடைந்தனர்.

## திண்டுக்கல்லில் அண்ணா பவள விழா

திண்டுக்கல், அக். 5— திண்டுக்கல் 21-வது வட்டம் எம். ஜி ஆர். மன்றம் சார்பில் அண்ணா பவள விழா நடைபெற்றது.

ஏ. ரகமதுல்லா தலைமையில் நகர செயலாளர் சி. சினிவாசன் கழக கொடியை ஏற்றி வைத்து இனிப்பு வழங்கினார்.

எம். குணசேகரன், அண்ணா பஞ்சாலை தொழிற் சங்க செயலாளர் ஜெயராமன், ஜோசப், சவுரியார், எஸ். கண்ணன் சங்கர், ஜோதிமணி, முருகன் ஆகியோர் சிறப்புரை ஆற்றினர்.

## மதுரையில் பலத்த மழை

மதுரை, அக். 5— மதுரையில் பலத்த மழை பெய்தது. சுமார் 45 நிமிடங்கள் நீடித்த இந்த மழையால் தாழ்வானப்பகுதிகளில் வெள்ளம் கரை புரண்டோடியது.

நீர்ப்பிடிப்பு பகுதியில் தொடர்ந்து மழைபெய் வருவதால் பெரியாறு நீர்த் தேக்கத்தில் நீர் மட்டம் 126.65 அடியாக உயர்ந்தது. வினாடிக்கு 935 கன அடி தண்ணீர் வீதம் நீர்த்தேக்கத்திற்கு தண்ணீர் வருகிறது 706 கன அடி தண்ணீர் வெளி விடப்படுகிறது என அதிகார வட்டாரங்கள் தெரிவித்தன.

ஆந்திர மாநில

## இளம் பெண் கடத்தல்: சென்னையில் விசாரணை

சென்னை, அக். 5— ஆந்திர மாநிலம் விஜய நகரை அடுத்த பாலூர் கிராமத்தைச் சேர்ந்தவர் ரெட்டி. இவர் மகள் ரமணம்மா வயது 16 கடந்த 1981 ஆண்டில் காணாமல் போய்விட்டார்.

இது குறித்து விசாரித்த பாலூர் போலீசார் ரமணம்மாவை கண்டு பிடிக்க முடியவில்லை என கூறிவிட்டனர்.

இதையடுத்து ரெட்டி சுப்ரீம் கோர்ட் தனது மகளை கண்டு பிடிக்க உத்தரவிட வேண்டும் என மனு தாக்கல் செய்தார்,

ரமணம்மாவை கண்டு பிடித்து அவளது பெற்றோரிடம் ஒப்படைக்கும்படி சுப்ரீம் கோர்ட் உத்தரவிட்டது.

இதையடுத்து ஆந்திர போலீஸ்துறையைசேர்ந்த அதிகாரி ரமணமூர்த்தி தலைமையில் ஆந்திர போலீசார் சென்னை வந்து விசாரணை நடத்தி வருகிறார்கள்.

## பஞ்சப்பட்டியில் கழகப் பொதுக்கூட்டம்

பஞ்சப்பட்டி, அக். 5— பேரறிஞர் அண்ணா பவள விழாவையொட்டி கழகப் பொதுக் கூட்டம் பஞ்சப்பட்டி தியாகி கருப்பண்ணன் திடலில் நாளை 6ந்தேதி மாலை 7மணிக்கு நடைபெறுகிறது. வி. முருகன் தலைமையில் எம். எஸ். மணி வரவேற்று பேசுகிறார். மாநாகராசன் வீ. ப. அண்ணாதாசன். கே. பெருமாள் து. க. ஸ்டாலின், ஆர். ரத்தினம், க. தமிழ்வாணன் எம். வீராசாமதா. காரைத்தங்கம் ஆகியோர் முன்னிலையில் என். நல்லுசாமி கொடியேற்றி வைக்கிறார்.

கோடம்பாக்கம் குமார், மதுரை அன்னம்மாள், இளவரசன், பாப்பா சுந்தரம், எம். வி. கருப்புசாமி, சிந்தை இஸ்மாயில், சுப்ரமணியன், பன்னீர்செல்வம், ஆர். சோமு, ஆர். மதிவாணன், பி. பொன்னுசாமி மற்றும் பலர் பேசுவர். டி. பழனியாண்டி நன்றி கூறுவார்.

# மேட்டூர் அணையில் 48 மணி நேரத்தில் 18அடி தண்ணீர்உயர்வு

## தஞ்சை மாவட்டத்தில் தொடர்ந்து மழை

தஞ்சை, அக் 5. தமிழ்நாட்டில் பரவலாக பலத்த மழை பெய்து வருகிறது. 48 மணி நேரத்தில் மேட்டூர் அணையில் நீர்மட்டம் 18 அடி உயர்ந்துள்ளது.

தமிழ்நாட்டில் முன் கூட்டியே வடகிழக்கு பருவமழைக் காலம் தொடங்கி இருப்பதால் மாநிலத்தில் பரவலாக மழை பெய்து வருகிறது.

கோவை மாவட்டத்தில் கடந்த3நாட்களாகபலத்த மழை பெய்து வருகிறது இதனால் தாழ்வான பகுதிகளில் வெள்ளம் புகுந்தது. சங்கனூர்பள்ளம் கரைகள் மற்றும் தாழ்வான பகுதிகளில் கட்டப்பட்டிருந்த ஆயிரம் குடிசைகள் வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டன 4 ஆயிரம் பேர் வீடிழந்து தவிக்கிறார்கள்.

திருப்பூரில் உள்ள நொய்யல் ஆற்றில் ஏற்பட்ட வெள்ளம் காரணமாக 100 குடிசைகள் அடித்துச் செல்லப் பட்டதாக மாவட்ட கலெக்டர் என். ஆதிமூலம் கூறினார்,

## தீவிர கண்காணிப்பு

பல்லடம்தாலுக்காவில் உள்ள பள்ளபாளையம், சியாமளாபுரம் ஆகிய இடங்களில் பொதுப் பணித்துறை அலுவலர்களின் தீவிர கண்காணிப்பு காரணமாக ஏற்பட இருந்த வெள்ளச்சேதம் தடுத்து நிறுத்தப்பட்டது.

சங்கனூர் பள்ளம், ரத்னபுரி, சிவானந்தகாலனி, போதனூர் ஆகிய இடங்களில் தாழ்வான பகுதிகளில் வெள்ளம்புகுந்தது. சில இடங்களில் கட்டிடங்கள் சேதம் அடைந்தன.

சிரியன்சர்ச் ரோடு அருகே ஒரு குடிசை சுவர் இடிந்து விழுந்ததில் அக்குடிசைக்குள் இருந்த வயதான மூதாட்டியும் அவரது பேத்தியும் இடிபாடுகளில் சிக்கி பரிதாபமாகச் செத்தனர்.

வையம்பாளையத்தில் நடந்த வாரச்சந்தைக்கு போய்க் கொண்டிருந்த 2பெண்கள் காட்டாற்றில் இறங்கி நடந்த போது ஏற்பட்ட திடீர் வெள்ளத்தில் அவர்கள் நீரில் மூழ்கினர்.

## தஞ்சை

தஞ்சையில்தொடர்ந்து மழை பெய்து வருகிறது. இந்த மழை 3 லட்சத்து 50 ஆயிரம் ஏக்கர் நிலத்தில் பயிரிடப்பட்டு உள்ள தாளடிப் பயிர் செழித்து வளர உதவும். மேலும் சம்பா பயிர் சாகுபடிக்கு வேண்டிய தண்ணீர் இப்போது பெய்துவரும் மழையால் கிடைத்துள்ளது

இப்போதைய மழையின் காரணமாக நீர்த்தேக்கங்கள் நிரம்பி வருகின்றன.

காவிரிநீர்ப்பிடிப்புபகுதிகளில் 2-ம் தேதியும் 3-ந் தேதியும் (48 மணி நேரம்) பெய்த மழையால் மேட்டூர் அணையின் நீர் மட்டம் 18 அடி உயர்ந்துள்ளது வினாடிக்கு 90 ஆயிரத்து 200கன அடி தண்ணீர் வீதம் மேட்டூர் அணைக்கு நீர் வரத்து இருந்தது 2 ஆயிரத்து 800 கோடி கன அடியாக இருந்த நீர்த்தேக்க அளவு 5 ஆயிரத்து 600 கோடிகன அடியாக உயர்ந்தது

## சென்னை

கடந்த சில நாட்களாக சென்னையிலும் அதன் சுற்றுப்புறங்களிலும் பெய்துவரும் மழையால் சென்னைக்கு குடிநீர் சப்ளை செய்யும் நீர்த்தேக்கங்களில் தண்ணீர் மட்டம் உயர்ந்துள்ளது. இதனால் ஜனவரி மாதம் கடைசி வரை சென்னை நகருக்கு சப்ளை செய்ய தேவையான தண்ணீர் கிடைத்துள்ளது.

தென் ஆற்காடு மாவட்ட

## இளைஞர் அணிக்கு மாவட்ட செயலாளர் வேண்டுகோள்

கடலூர், அக். 5— தென்ஆற்காடு மாவட்ட இளைஞர் அணிச் செயலாளர் ராமலிங்கம் விடுத்துள்ள வேண்டுகோள் வருமாறு:-

வருகிற 7-ந்தேதிஅன்று சென்னையில் நடக்கவிருக்கும் அண்ணா பவளவிழா பேரணியிலும், சீரணி அரங்கில் நடைபெறும் பொதுக் கூட்டத்திலும் முதல்வர் டாக்டர் புரட்சித் தலைவர் அவர்களும் கழக தலைவர்களும் சிறப்புரை யாற்ற இருக்கிற நிகழ்ச்சியில் கலந்து கொள்ள தமிழகமெங்குமிருந்து பல்லாயிரக்கணக்கான பேருந்துகளிலும், களிலும்வேன்களிலும் கழக தோழர்கள் வர இருப்பதால் நமது மாவட்டத்தில் இருந்து எம். ஜி. ஆர் இளைஞர் அணி சார்பில் 50 பேருந்துகள் புறப்பட இருப்பதால் ஆங்காங்கே இருக்கும் எம். ஜி. ஆர் இளைஞர் அணி தோழர்கள்பேருந்துகளுக்குபேனர்களுடனும், கழக கொடியுடனும், தவறாமல் சீருடை அணிந்து சிறப்புற வருமாறு கேட்டுக்கொள்கிறேன்.

இவ்வாறு ராமலிங்கம் அறிவித்துள்ளார்.

## செஞ்சியில் அண்ணா பவளவிழா

தென்னாற்காடு மாவட்டம் செஞ்சியில்பேரறிஞர் அண்ணா பவள விழாவை முன்னிட்டு கழக கொடியேற்று விழா கல்வெட்டு திறப்பு நிகழ்சசி நடைபெற்றது. எம். ஜி. ஆர்மன்ற செயலாளர் காஜா செரீப் தலைமையில் செஞ்சி ஒன்றிய கழக செயலாளர் சபி அகமது, பொன் பத்தி ஆறுமுகம் ஆகியோர் முன்னிலையில் நயம்பாடி ராஜி வரவேற்புரையாற்ற மாவட்டச் செயலாளர் திரு. ஹீராசந்த் எம். பி. கழக கொடியினை ஏற்றி வைத்து கல்வெட்டினை திறந்து வைத்தார். மேல் மலையனூர் சட்டமன்ற உறுப்பினர் ஏ. சின்னதுரை மாவட்ட எம். ஜி. ஆர். இளைஞர் அணி பொருளாளர் செஞ்சி வெ. ஏழுமலை நகர செயலாளர் கு. கண்ணன், ஒன்றிய பொருளாளர் தேவராசன் திண்டிவனம் நகர செயலாளர் கணேசன ஆகியோர் சிறப்புரையாற்றினார்கள் நகர துணைச் செயலாளர் காசிம் நன்றி கூறினார்.

மாவட்ட இளைஞர் அணி பொருளாளர் வழக்றிஞர் செஞ்சி வெ. ஏழுமலை ஏழைகளுக்கு சக்கரைப் பொங்கல வழங்கினார்,

## கோவையில் அண்ணா பவள விழா

கோவை, அக். 5— கோவை 1வது வட்டத்தில் எம் ஜி. ஆர். இளைஞர் அணியின் சார்பில் இளங்கோ நகர், சக்தி ரோடு ஆகிய பகுதிகளில் அண்ணாபவள விழா கொண்டாடப்பட்டது. விழாவில் மலரவன், புரட்சித்தம்பி, பாலசுப்ரமணியம் ஆகியோர் கழக கொடியினை ஏற்றி வைத்தார்கள்.

## சேலம் நகரில் அண்ணா பவள விழா

சேலம், அக். 5— சேலம், குகைவட்டபுரம் பஞ்சந்தாங்கி ஏரிக்கரை பகுதியில் அண்ணா பவள விழா நடைபெற்றது.

ராஜமாணிக்கம் தலைமை தாங்கினார், பெருமாள், அய்யனார் முன்னிலை வகித்தனர். மன்ற செயலாளர் உரை முரசு பூசுப் வரவேற்றார். கிருஷ்ணராஜ் எம். எல் ஏ. அண்ணாஉருவப்படத்தையும் நகர செயலாளர் எஸ் பி அங்கமுத்து புரட்சித்தலைவர் உருவப் படத்தையும் திறந்து வைத்தார்கள்.

சேலம் மாவட்ட இளைஞர் அணி தலைவர் ராமலிங்கம், இளைஞர் அணி அலுவலகத்தை திறந்து வைத்தார். மாவட்ட கழக செயலாளர் பி. கண்ணன் கழகக் கொடியை ஏற்றி வைத்து இனிப்பு வழங்கி சிறப்புரை ஆற்றினார். எ. எம். அர்த்தனாரி, மணிக்குமார் ஆதவன், இளங்கோ, இரா. பூபதி, சம்பத்குமார் ஆகியோரும் விழாவில் கலந்துகொண்டுபேசினார்கள், எம். கதிர்வேல் நன்றி கூறினார்.

விழா முடிவில் நினைத்ததைமுடிப்பவன், ஆயிரத்தில்ஒருவன், ஆகிய திரைப்படங்கள் திரையிடப்பட்டன.



கிளர்ச்சி நேரங்களில்

# பஸ்களை தாக்கினால் அந்த வழித்தடத்தில் பஸ்கள் நிறுத்தப்படும்

## அமைச்சர் முத்துசாமி எச்சரிக்கை

திருநெல்வேலி, அக். 5. கிளர்ச்சி என்றால் உடனே தாக்குதலுக்கு உள்ளாவது பஸ்கள்தான் இனி எந்தவொரு வழித் தடத்திலாவது பஸ்கள் தாக்கப்படுமேயானால் அந்த வழித் தடத்தில் பஸ்கள் விடுவதை அரசு நிறுத்திவிடும் என்று அமைச்சர் முத்துசாமி எச்சரித்தார்.

திருவள்ளுவர் பஸ் போக்குவரத்து கழகம் மற்றும் கட்டபொம்மன போக்குவரத்து கழகம் ஆகியவற்றின் சார்பில திருநெல்வேலி நகரில் புதிதாக 20 பஸ் வழித் தடங்களும், நகரிலிருந்து வெளியூர்களுக்கு புதிதாக 3 பஸ் வழித் தடங்களும் தொடங்கப்பட்டன.

போக்குவரத்துத் துறை அமைச்சர் முத்துசாமி இந்த புதிய பஸ் வழித் தடங்களைத் துவக்கி வைத்து பேசினார் அப்போது அவர் கூறியதாவது: ஏதாவது கிளர்ச்சி என்றால் உடனே கிளர்ச்சியாளர்களின் பார்வை பஸ்கள் மீதுதிரும்புகின்றன அவை தாக்குதலுக்கு உள்ளாகின்றன.

இவ்வாறு செய்வதை விட்டு விட்டு மக்கள் பஸ்களை தங்கள் சொத்தாக எண்ணி பாதுகாக்க வேண்டும்.

இனி எதிர்காலத்தில் எந்த ஒரு வழித் தடத்திலாவது அரசுக்கு சொந்தமான பஸ்கள் தாக்கப்படுமேயானால், அந்த வழித் தடத்தில்பஸ்கள் விடுவதை அரசு நிறுத்திவிடும்.

இவ் வாறு அமைச்சர் முத்துசாமிகூறினார்.

விழாவுக்கு மாவட்ட ஆட்சித்தலைவர் வி. ராமதாஸ் தலைமைவகித்தார்,



Edited And Published by K. RAVINDRAN on Behalf of Thangamani Publications And Printed by All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras—600 029

★ 22 மாநிலங்களில் முதன்முதலாக 4 அகவிலைப்படி உயர்வை அறிவித்தது புரட்சித்தலைவர் அரசு தான்

★ மேற்கு வங்கத்தில் 13 அகவிலைப்படி உயர்வு பாக்கி

## இனவெறியை அரசியலாககொண்ட

# கருணாநிதியுடன் கூட்டுசேரலாமா?

### கம்யூனிஸ்டுகட்குசெல்விஜெயலலிதாஎம்.பி.கேள்வி

**சென்னை, அக். 5 இனவெறியை அரசியலாகக் கொண்டுள்ள கருணாநிதியுடன் கம்யூனிஸ்டு கட்சியினர் கூட்டு சேரலாமா என்று செல்வி ஜெயலலிதா எம். பி. வினவினார். முற்போக்கு அரசு என்று சொல்லிக் கொள்ளும் மேற்குவங்க ஆட்சியின் அரசு ஊழியர்களுக்கு 13 அகவிலைப்படி பாக்கி உள்ளது என்பதையும் அவர் சுட்டிக்காட்டினார்.**

வள்ளுவர் கோட்டத்தில் தமிழ்நாடு சத்துணவு பணியாளர்கள் முதல் மாநாட்டை செல்வி ஜெயலலிதா எம். பி. தொடங்கி வைத்துப் பேசியதாவது:-

கேளுங்கள் கொடுக்கப்படும். தட்டுங்கள் திறக்கப்படும் என்ற தத்துவத்தில் நீங்கள் நம்பிக்கை வைத்திருக்கிறீர்கள் எனவே தான் கோரிக்கைகளை முன்வைத்து மாநாடு நடத்துகிறீர்கள். நமது இதய தெய்வம் புரட்சித்தலைவர் அவர்கள் மீது நம்பிக்கை வைத்து கன்னியாகுமரியிலிருந்தும் இங்கே திரண்டு வந்திருக்கிறீர்கள் இல்லையா?

("ஆமாம்! ஆமாம்!" மக்கள் ஆரவாரம்)

உங்கள் கோரிக்கைகளைப் புரட்சித்தலைவர் தாயுள்ளத்தோடு பரிசிலிப்பார் என்று நீங்கள் நம்பலாம்.

சத்துணவுத் திட்டப் பணியில் ஈடுபட்டிருக்கும் ஒரு லட்சத்து 80 ஆயிரம் சகோதரிகளையும் புரட்சித்தலைவர் அவர்கள் தனது உடன்பிறந்த சொந்தச் சகோதரிகளாகக் கருதுகிறார்.

(பலத்த கரவொலி)

## ஊதியக் குழு கவனிக்கும்

நான்காவது ஊதியக் குழுவை புரட்சித்தலைவர் அவர்கள் அமைத்திருக்கிறார். இந்தக் குழுவின் முன்பு உங்கள் பிரச்னைகளை- உங்கள் கோரிக்கைகளை சகோதரர் சிவ. இளங்கோ எடுத்து வைத்து வாதாடுவார்.

நானும் உங்கள் சார்பாக வாதாட வேண்டிய இடத்தில் வாதாடுகிறேன்

(கரவொலி)

("வாதாடி வெற்றியும் பெறவேண்டும்'— ஒரு மூதாட்டி வாழ்த்துகிறார்

"உங்கள் நல்லாசி இருந்தால் நிச்சயம் வெற்றி பெறுவோம்.' என செல்வி ஜெயலலிதா எம்.பி. பதிலளித்தார்.

மேலும் செல்வி ஜெயலலிதா எம். பி. பேசியதாவது:-

தமிழகத்தில் ஏறத்தாழ எட்டு லட்சம் அரசு ஊழியர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்கு நான்குபஞ்சப்படி உயர்வு-நான்கு அகவிலைப்படி உயர்வு, அளிக்கப்படும் என்று முதல்வர் புரட்சித்தலைவர் அண்மையில் அறிவித்தார். பொதுவாக மைய அரசு அகவிலைப்படி அறிவித்த நான்கு ஐந்து மாதங்களுக்குப் பின்னர் தான் மாநில அரசுகள் அகவிலைப்படி அறிவிக்கும்.

ஆனால்புரட்சித்தலைவர் அவர்கள் இம்முறை மைய அரசு அகவிலைப்படி அறிவிப்பதற்கு முன்னரே எட்டு லட்சம் தமிழக மாநில அரசு ஊழியர்களுக்கும் நான்கு அகவிலைப்படி உயர்வினை அறிவித்திருக்கிறார். 22 மாநிலங்களில் முதன்முதலாக அகவிலைப்படி உயர்வு அறிவித்த ஒரே அரசு, நமது இதய தெய்வம்புரட்சித்தலைவர் அவர்களின் தமிழக அரசு தான்.

(பலத்த கரவொலி)

மேற்கு வங்கத்தில் மார்க்சிஸ்ட் கூட்டணி அரசு நடைபெறுகிறது நம்முடைய மார்க்சிஸ்ட் சகோதரர்கள் தங்களுடைய அரசுதான்-மேற்கு வங்க அரசு தான் முற்போக்கு அரசு என்பார்கள்.

## மே. வங்கத்தில் என்ன நிலை?

ஆனால் மேற்குவங்கத்தில் ஏற்கனவே 9 அகவிலைப்படி உயர்வு அளிக்கப்படவில்லை. தற்போது மேலும் 4 அகவிலைப்படி உயர்வு அளிக்கப்படவில்லை. ஆக மொத்தம் 13 அகவிலைப்படி உயர்வு பாக்கி ஆனால் தமிழகத்தில் ஒரு அகவிலைப்படி உயர்வுகூடப் பாக்கி இல்லை மைய அரசு அறிவிப்பதற்கு முன்பே தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் நான்கு அகவிலைப்படி உயர்வினை அறிவித்திருக்கிறார்.

சென்னையை விடப் பெரிய நகரம். கல்கத்தா நகரம். மேற்கு வங்கத்தின் தலைநகரம். ஆனால் சென்னை நகர அரசுஊழியர்களுக்கு நகர ஈட்டுப்படி அளிக்கப்படுகிறது.

ஆனால் மேற்கு வங்கத்தில்- மார்க்சிஸ்ட் முற்போக்கு ஆட்சியில்- கல்கத்தா நகர என்.ஜி.ஓ.களுக்கு நகர ஈட்டுப்படி அளிக்கப்படவில்லை.

என்ன காரணம். கல்கத்தா பெருநகர என்.ஜி.ஓ களுக்கு நகரஈட்டுப்படி அளித்தால், இதர நகர என்.ஜி.ஓ. களும் கேட்பார்களாம் அதனால் அளிக்கவில்லையாம்! இது எப்படி இருக்கிறது?

## எது மக்கள் விரோத அரசு?

மேற்கு வங்க மார்க்சிஸ்ட் அரசைப் போல், தமிழகத்தில் புரட்சித் தலைவர் அரசு 13 அகவிலைப்படி பாக்கி வைத்திருந்தால், நமது மார்க்சிஸ்ட் சகோதரர்கள் என்ன கூறுவார்கள்? புரட்சித்தலைவர் அரசு பிற்போக்கு அரசு என்று கூறுவார்கள்.

கல்கத்தா பெருநகர என்.ஜி.ஓ.களுக்கு நகர ஈட்டுப்படி இல்லை என்று மார்க்சிஸ்ட் அரசு கூறுவது போல் புரட்சித்தலைவர் அவர்கள் கூறியிருந்தால், நமது மார்க்சிஸ்ட் சகோதரர்கள் என்ன கூறுவார்கள்? புரட்சித் தலைவர் அரசு உழைக்கும் மக்களின் விரோதி என்று கூறுவார்கள்.

இப்போது புரிகிறதா? எந்த அரசு உழைக்கும் மக்களுக்கு எதிரான அரசு? எந்த அரசு என். ஜி. ஓ களின் உரிமைகளை மறுக்கிற அரசு?

## இவர் தான் தமிழராம்!

ஒரு கம்யூனிஸ்ட்டின் கடமை என்ன? இனவெறியை எதிர்த்துப் போராடுவது தானே ஒரு கம்யூனிஸ்டின் முதல் கடமையாக இருக்க முடியும். தமிழகத்து எதிர்க்கட்சித் தலைவர் ஒருவர் மேற்கு ராமநாதபுரத்திற்குப் போய் முத்தான கருத்தைச்சொல்லி இருக்கிறார்.



'நான் தான் தமிழ் மண்ணில் பிறந்தவன். புரட்சித்தலைவர் எம்.ஜி. ஆர் எங்கோ பிறந்தவர்' என்று ஒரு வாரத்திற்கு முன்புதான் கூறியிருக்கிறார். உங்களைக் கேட்கிறேன். புரட்சித்தலைவர் எம். ஜி. ஆர்! அவர்கள் யார்? உங்கள் அண்ணன் இல்லையா?

ஆமாம்! ஆமாம்! (மக்கள் ஆரவாரம்)

உங்களைப்போல் தமிழகத்துத் தாய்க்குலமே புரட்சித்தலைவர் அவர்களை எங்கள் வீட்டுப் பிள்ளை என்று உரிமை கொண்டாடுகிறது.

(பலத்த கரவொலி)

ஆனால் தமிழகத்து எதிர்க்கட்சித் தலைவர் ""சத்தியமா, அங்காள பரமேசுவரி அறிய நான் தான் தமிழன்! நான் தான் தமிழன்"" என்று இனவெறியின் சிகரத்திற்கே போகிறார்,

(சிரிப்பு)

அவரோடு நமது கம்யூனிஸ்ட் சகோதரர்கள் கரம் கோர்த்து நிற்கிறார்கள் மெய்யான ஒரு கம்யூனிஸ்ட் இப்படி இனவெறியர்களோடு இணைந்து நிற்க முடியுமா?..நிற்கலாமா?,

நான் அரசியல் பேசுவதாக எண்ணக்கூடாது. இனவெறியை எதிர்த்துப் போராடுவது என்பது, உலகம் ஏற்றுக்கொண்டிருக்கின்ற கொள்கை. இந்தக் கொள்கையைச் செயல் படுத்துவதில், உலகம் முழுமையும் உள்ள முற்போக்கு சக்திகள் ஒருங்கிணைந்து நிற்கின்றன ஆனால் நமது கம்யூனிஸ்ட் சகோதரர்கள்...?

## கூட்டு சேரலாமா?

இனவெறியையே அரசியலாகக்கொண்டவர்களுடன் கூட்டுச் சேர்ந்து நிற்கிறார்கள் நிற்கலாமா என்று கேட்டுப்பாருங்கள் பதிலே சொல்லமாட்டார்கள்.

சத்துணவுப் பணியாளர்களாகிய உங்கள் கோரிக்கைகளுக்காக என்னால் முடிந்ததைச் செய்வேன் என்று கூறி மாநாட்டினைத் துவக்கிவைக்கிறேன்,

இவ்வாறு செல்வி ஜெயலலிதா எம்.பி, கூறினார்.

---

கன்னியாகுமரி-காஷ்மீருக்கு புதிய

## எக்ஸ்பிரஸ் ரயில் போக்குவரத்து தொடங்கியது

நாகர்கோவில், அக். 5- கன்னியாகுமரியிலிருந்து காஷ்மீரில் உள்ள ஜம்மு தாவிக்கு ""இமாசாகர்"" என்ற புதிய மின்னல்வேக எக்ஸ்பிரஸ் ரெயில் போக்குவரத்து தொடங்கியது.

இந்திய ரெயில்களில் இதுதான் நீண்ட தூரம் பயணமாகிறது. மொத்த தூரம் 3 ஆயிரத்து 868 கிலோ மீட்டர் ஆகும், மொத்த பயண நேரம் 67 மணி 15 நிமிடங்கள் ஆகும். தன்னுடைய நீண்ட பயணத்தின்போது யூனியன் பிரதேசமான டெல்லி மற்றும் 9மாநிலங்களை இந்த புதிய எக்ஸ்பிரஸ் ரெயில் கடக்கிறது.

கன்னியாகுமரியில் இருந்து புதனன்றும் ஜம்முதாவியிலிருந்துசனிக்கிழமையன்றும் ""இமாசாகர்"" மின்னல் வேக எக்ஸ்பிரஸ் புறப்படும்.

---

# தமிழுக்குப் பாதுகாவலர் புரட்சிதலைவர் ஒருவரே

### போபாலில் கவிஞர் முத்துலிங்கம் எம். எல். சி. கருத்துரை

**போபால், அக். 5- தமிழுக்குப் பாதுகாவலராகப் புரட்சித் தலைவர் ஒருவர் தான் இருக்கிறார் என்று போபால் தமிழ்ச் சங்கக் கூட்டத்தில் கவிஞர்முத்துலிங்கம் எம். எல்.சி கூறினார்.**



தமிழக அரசின் பொது நிறுவனங்கள் குழு வடமாநிலங்களில் சுற்றுப் பயணம் செய்தது. இக்குழுவில் இடம் பெற்றுள்ள உறுப்பினர்களில் ஆ. வெள்ளைசாமி எம். எல்.ஏ சத்தியமூர்த்தி எம் எல்..ஏ, சிவசாமி எம். எல். ஏ. ஆனூர் ஜெகதீசன் எம். எல். ஏ. சாமிக்கண்ணு எம்.எல் ஏ கோலப்பன் எம். எல். சி. அகமதுத்தூர் ராமலிங்கம் எம். எல்.சி. கவிஞர் முத்துலிங்கம் எம்.எல.சி. கம்யூனிஸ்டு கட்சி எம்.எல்.ஏ வரதராசன் திருமாறன் எம். எல்.ஏ. ஆகியோர் இச் சுற்றுப் பயணத்தை மேற்கொண்டனர்.

மத்தியப் பிரதேசத்தின் தலைநகரான போபாலில் தமிழ்ச் சங்கத்தின் சார்பில் இவர்களுக்குவரவேற்பளிக்கப்பட்டது.

வரவேற்புக்கு நன்றி தெரிவித்து கவிஞர் முத்துலிங்கம் பேசுகையில்கூறியதாவது:—

உலகத்தில் முதன்முதல் தோன்றிய நிலப் பரப்புக்குக் குமரிக்கண்டம் என்று பெயர். இந்தக்குமரிக் கண்டத்தில் தான் உலகமொழிகளுக்கெல்லாம் தாய் மொழியான நமது தமிழ் மொழி தோன்றியது.

## தமிழ் சங்கங்கள்

இந்தக் குமரிக்கண்டத்தில் தான் இரண்டு தமிழ்ச்சங்கங்கள் முதற் சங்கம், இடைச்சங்கம் என்ற பெயரில்இருந்தன. முதற் சங்கம் தென் மதுரையில் இருந்தது. அது கடல் கோளுக்கிரையான பின் இரண்டாவது தமிழ்ச்சங்கம் கபாடபுரத்தில் அமைந்தது,

இந்தக் கபாடபுரத்து முத்துக்களுக்கு ரோம சாம்ராஜ்யத்தில் விலைமதிப்பற்ற செல்வாக்கு இருந்தது. கபாடபுரத்து முத்துக்களை ஜூலியஸ் சீசர் தனது மணிமகுடத்தில் பதித்துக் கொண்டான் என்று யவனநாட்டு அறிஞர்கள் எழுதியிருக்கிறார்கள். கிரேக்கப் பேரரசி கிளியோபாட்ரா பாண்டிய நாட்டு முத்துக்களை சாராயத்தில் ஊறவைத்து அது கரையக் கரையக் குடித்தாள் என்று தாலமி என்ற யவன நாட்டு வரலாற்றாசிரியர் எழுதியிருக்கிறார்.

3-வது கடல் கோளில் முத்துக்குளிப்புக்கு தலையாய பட்டினமாகஇருந்த கபாடபுரமும் அழிந்துவிட்டது. அதற்குப் பிறகு தான் இப்போதிருக்கிற மதுரையிலே 3-வது தமிழ் சங்கம் உதயமானது,

## குமரிக்கண்டம்

நமது குமரிக் கண்டம் ஆஸ்திரேலியக் கண்டத்தின் தென் கோடி முனை வரையிலும் ஒருகாலத்தில் பரவியிருந்தது. இன்றைக்கு இருக்கின்ற குமரி முனைக்குத் தெற்கே முற்காலத்தில் கடல் இல்லை, மலைத் தொடர்களை உள்ளடக்கிய நிலப்பரப்புதான் இருந்தது அந்தமலைத்தொடர்களுக்கு குமரிமலை என்று பெயர் அந்த மலைத் தொடர்களுக்கு அருகே பஃறுளி ஆறு என்னும் ஓர் ஆறு ஓடிக் கொண்டிருந்தது. இரண்டாவது கடல் கோளில் இவையெல்லாம் அழிந்துவிட்டன.

''பஃறுளி ஆற்றுடன் பன்மலை அடுக்கத்து— குமரிக்கோடும் கொடுங் கடல்கொள்ள'' என்ற சிலப்பதிகார வரிகளால் இதை அறியலாம். இன்றைக்குக் கூட நில நூல் ஆய்வாளர்கள் குமரி முனைக்குத் தெற்கே 125 கல்லுக்கு அப்பால் பல மலைத் தொடர்கள் இருப்பதாகவும் அதையொட்டி ஓர் ஆறு ஓடிக்கொண்டிருப்பதாகவும் கூறுகின்றனர். அந்த ஆறுதான் பஃறுளி ஆறாக இருக்கலாமென்றும் அவர்கள் எண்ணுகின்றனர்.

## தர்மத்துக்கே அடுக்காது

இரண்டாவது கடல் கோள் தோன்றும் வரையிலும் இலங்கை என்ற ஓர் நாடு பற்றி எந்தக் குறிப்பும் இல்லை குமரிக கண்டத்தை ஆண்டவர்கள் அனைவரும் பாண்டிய மன்னர்களே. அழிந்து போன குமரிக்கண்டத்தில் 49 பாண்டிய நாடுகள் மூழ்கிவிட்டன.

ஏழ்தெங்கநாடு, ஏழ் முன்பாலைநாடு, ஏழ்பின் பாலை நாடு, ஏழ்குறும் பனை நாடு, ஏழ்குன்ற நாடு, ஏழ்குணகாரை நாடு என்று 49 பாண்டிய நாடுகள் மறைந்துபோயின இதில் ஏழ்தெங்க நாடு தான் நாளடைவில் மரூஉப் பெயர் கொண்டுஏழ்தெங்க ஏழங்க, எழங்க என்று மாறி இப்போதிருக்கும் இலங்கை என்ற பெயர் பெற்றது. ஏழ்தெங்க நாட்டின் அழிந்துபோன சில பகுதிகள் போக எஞ்சியுள்ளது தான் இன்றைய இலங்கை.

ஆக இலங்கைக்குப் பூர்வீகமானவர்கள் தமிழ்ப் பெருங்குடி மக்களே, அதுவும் பாண்டிய நாட்டைச் சேர்ந்தவர்களே. ஆனால் எங்கிருந்தோ வந்து இலங்கையை ஆக்கிரமித்துக் கொண்ட சிங்கள வெறியர்கள் இலங்கையின் பூர்வீகக் குடிகளான தமிழ்மக்களை தர்மத்துக்கே அடுக்காத வகையில் வெளியேற்றுகின்றனர்.

## தமிழுக்கு பாதுகாவலர்

ஈழத் தமிழர்களுக்கு நியாயமான முறையில் உதவும் எண்ணம் கொண்டவராகப்புரட்சித் தலைவர் ஒருவர் தான் இன்றைக்குத் தமிழ்நாட்டில் இருக்கிறார். எதிர்க்கட்சிகளெல்லாம் இலங்கைத் தமிழர் பிரச்சினையைத்தங்கள் கட்சியின் வளர்ச்சிப் பிரச்சினையாக்கிக் கொண்டார்களன்றி உண்மையிலே இலங்கைத் தமிழர்களுக்கு உதவுவதாகஅவர்கள் இல்லை.

இன்றைக்கு தமிழனுக்கு மட்டுமல்ல தமிழ் மொழிக்கும் பாதுகாவலராக விளங்குபவர் புரட்சித் தலைவர் தான். இவர் தோற்றுவித்த தமிழ் பல்கலைக்கழகம் ஒன்றே போதும் இவருடைய தமிழ்ப் பற்றுக்கு.

தமிழ்க் கவிஞர்களை இவர் மதிக்கும் அளவுக்கு எந்தத் தலைவனும் இதுவரைமதித்ததில்லை. உலக மகாகவி என்றுபட்டம் பெற்றவர். முதலமைச்சராக இருந்த போது கூட பாரதிதாசன் பெயரில் இயக்கக் கவிஞர்களை கௌரவிக்க வேண்டும் என்ற எண்ணம் வரவில்லை,

புரட்சித் தலைவர் தான் அந்தக் கௌரவத்தை கவிஞர்களுக்கு அளித்தார். அதற்குக் காரணம் தமிழ் மீது அவர் கொண்டுள்ள அளவிலா பற்று தான். அதனால் தான் அத்தகைய தமிழ்க் கவிஞர்களையும் தமிழையும் மதிக்கும் புரட்சித் தலைவர் வாழ்க, புரட்சித் தலைவரை விட்டால தமிழுக்கும் கலைத்துறைக்கும் வேறு பாதுகாப்பு இல்லை

இவ்வாறு கவிஞர் முத்துலிங்கம் எம்.எல்.சி பேசினார்,

---

12 ஆயிரம் சந்தாதாரர் பயன் பெறும்

# எலக்ட்ரானிக் டெலிபோன் நிலையம் பணி தொடங்கியது

**சென்னை, அக். 5- 12 ஆயிரம் சந்தாதாரர் பயன் பெறக் கூடிய எலக்ட்ரானிக்தொலைபேசி மையத்தை மைய அமைச்சர் காட்கில் நேற்று தொடங்கிவைத்து தமிழக அமைச்சர்பண்ருட்டி ராமச்சந்திரனுடன் முதல்முதலில் டெலிபோனில் பேசினார்.**

தென் மாநிலங்களில் முதன்முதலாக சென்னையில் அமைக்கப்பட்ட எலக்ட்ரானிக் டெலிபோன் தொடர்பு முறையை மத்திய அமைச்சர் காட்கில் நேற்று தொடங்கி வைத்தார். இந்த நிகழ்ச்சிக்குதொலைபேசித்துறை செயலாளர் தாமஸ் கோரா தலைமை வகிக்க சென்னை தொலைபேசி பொது மேலாளர் வி.எம். சுந்தரம் வரவேற்புரையாற்றினார். புதிய தொலைபேசி முறையை தொடங்கி வைத்து மைய அமைச்சர் காட்கில் தமிழக மின் துறை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரனுடன் பேசினார். அவர் பேசும் போது சென்னைக்கு புதிய தொலைபேசி முறை அமைக்கப்பட்டது குறித்து தன் வாழ்த்தை தெரிவித்தார் எதிர் முனையில் பேசிய அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் மைய அமைச்சரின் வாழ்த்துக்கு நன்றி கூறி இந்த வசதி சென்னைமக்களுக்குதங்கு தடையின்றி கிடைக்க ஆவன செய்யவேண்டும் என தனதுஎண்ணத்தை வெளியிட்டார்.

விழாவில் மைய அமைச்சர் காட்கில் பேசுகையில் கூறியதாவது:-

குறைந்தபட்சம் 8 ஆண்டுகளில் முடிக்கப்படவேண்டிய இந்த தொலைபேசி நிலையம் 18 மாதங்களில்நிர்மாணிக்கப்பட்டு உள்ளது அதற்காக இந்தப் பணியில சம்பந்தப்பட்ட அனைவரையும் பாராட்டுகிறேன்.

இந்தியா சுதந்திரம் பெற்றபோது நம் நாட்டில் 18 ஆயிரம் தொலைபேசிகளே இருந்தன. ஆனால் இன்று பம்பாயில் மட்டும்5 லட்சம் தொலைபேசிகள் உள்ளன. 7-வது ஐந்தாண்டு திட்டத்தில் தொலைபேசி துறைக்கு முக்கியத்துவம் கொடுத்து 12500 கோடி ரூபாய் இதற்காக ஒதுக்க திட்ட கமிஷனிடம் ஒப்புதல் கேட்டுள்ளோம் அவர்கள் அனுமதி தருவார்கள் என்று நம்புகிறோம்,

## தொழில் நுட்பம்

தொலைபேசிக்கு முக்கியத்துவம் அளிக்கும் வகையில் நவீன தொழில் நுட்பங்களை புகுத்தவும், நமது தேவைகளை நாமே பூர்த்தி செய்யும் வகையில் மூலப்பொருட்களை நாமே உற்பத்தி செய்யவும் பிரதமர் முடிவெடுத்தார். அதன்படி உத்திரபிரதேசத்திலும், பெங்களூரிலும் இரு தொழிற்சாலைகள் தொடங்கப்பட்டு பணிகள் நடந்து வருகின்றன. 1985 ல் இவைஉற்பத்தியை தொடங்குமென எதிர்பார்க்கப்படுகிறது.

கிராமங்களில் டெலிபோன் வசதி இன்றி மக்கள் சிரமப்படுகிறார்கள் 3 மைல் தூரத்துக்கு ஒரு டெலிபோன் பூத் அமைக்க மைய அரசு ஏற்பாடு செய்து வருகிறது.

இவ்வாறு மைய அமைச்சர் காட்கில் பேசினார்.

## பண்ருட்டியார்

விழாவில் சிறப்பு விருந்தினராக பங்கேற்று மின்துறை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் பேசுகையில் கூறியதாவது

மத்தியஅரசின்தொலைபேசி துறையும், மாநில அரசின் மின் துறையும் மக்களின் தேவைகளை பூர்த்து செய்யும்போது சில சங்கடங்களை எதிர் நோக்க வேண்டியிருக்கி

8-ம் பத்தி பார்க்க

---

## போலி ஆரோரூட் மாவு: அதிகாரிகள் வேட்டை

நாகர்கோயில், அக். 5- போலி ஆரோரூட் மாவு விற்பனை செய்த வியாபாரிக்கு 6 மாதம் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது அவரது பெயர் செல்வம் (வயது 54) இவர் நாகர்கோயில் கோட்டாறு பார்வதிபுரம் ரோமல் மளிகைவியாபாரம்செய்து வந்தார். இவர் போலி ஆரோரூட் மாவு விற்பதாக வந்த தகவலின் பேரில் நாகர்கோயில் நகராட்சிஉளவு இன்ஸ்பெக்டர் இவர் மீது வழக்கு தொடர்ந்தார். வழக்கை விசாரித்த மாஜிஸ்டிரேட் ராமலிங்கம் அவருக்கு 6 மாதம் கடுங் காவல் தண்டனையும் 1000 ரூபாய் அபராதமும் விதித்தார் அபராதம் கட்டத்தவறினால் மேலும் 3 மாதம் சிறை தண்டனை அனுபவிக்க வேண்டும் என்றும் தீர்ப்பு வழங்கினார்.

---

(5ம் பத்தி தொடர்ச்சி)

றது. இருப்பினும் மக்களின் ஆசைகளை புரிந்து கொண்டு நாம் செயல்படவேண்டும் கிரஹாம்பெல் டெலிபோனை கண்டுபிடித்த 6 ஆண்டுகளிலேயே சென்னைக்குடெலிபோன் வசதி வந்தது.

வளரும் நாடுகளில் இன்று செய்தி தொடர்பு முக்கிய ஒன்றாகிறது. இருள் வானத்தில் சிறிய நட்சத்திரங்கள் மட்டும் மின்னுவது போல் சிறிய குறைகள் மக்களுக்குதெரியத்தான் செய்யும் அதை நிவர்த்தி செய்து நாம் பணியை சரிவர செய்ய வேண்டும்.

அமைச்சர் காட்கில் பேச்சிலிருந்து தொலைபேசி துறை எவ்வளவு சிறப்பாக செயல்படுகிறதென்பதை உணர முடிகிறது.

இவ்வாறு அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் பேசினார்.

வரவேற்புரையாற்றிய வி. எம். சுந்தரம் பேசுகையில் இந்த மையத்தின் மூலம் 12 ஆயிரம் வாடிக்கையாளர்கள் தற்போது பயன்பெறுவார்கள் காத்திருப்போர் பட்டியலில் இருக்கும் 2 ஆயிரம் சந்தாதாரர்கள் நடப்பு நிதியாண்டில் சேர்த்துக் கொள்ளப்படுவர் என்று குறிப்பிட்டார்.

விழாவிற்கு தலைமை வகித்த தாமஸ் கோரா பேசுகையில் மனிதர்களை கொண்டு இயக்கப்படும் 8 லட்சம் தொலை பேசி மையங்கள் விரைவில் தானேஇயங்கும் தொலைபேசி மையங்களாக மாற்றப்படுமென்று கூறினார். விழாவில் மரகதம் சந்திரசேகர் எம். பி. தங்கபாலு எம். பி. ஆகியோரும் பங்கேற்றனர். சி. வி. ராஜன் நன்றி கூறினார்.

---

# ரூ. 5 கோடி மதிப்புள்ள சரக்குகளோடு மாயமாய் மறைந்த மூன்று கப்பல்கள்

சிங்கப்பூர், அக், 5— ரூ.5 கோடி மதிப்புள்ள சரக்குகளை ஏற்றிக்கொண்டு பம்பாய்க்கு வந்து கொண்டிருந்த 3 கப்பல்கள் மாயமாய் மறைந்து விட்டன.

சான் ஆரோன, சந்தாரோனா ஒகாமாஸ் பிராஸ்பர் என்ற 3 கப்பல்கள் ரப்பர், பாமாயில், கிளைசரின் ஆகியவற்றை ஏற்றிக்கொண்டு கடந்த ஆகஸ்ட் மாதம் சிங்கப்பூரிலிருந்து பம்பாய்க்கு புறப்பட்டன.

சுமார் 2 மாத காலமாகியும் அவை பம்பாய்க்கு வந்து சேரவில்லை.

இது பற்றி சிங்கப்பூர் போலீசில் புகார் செய்யப்பட்டது. ரூ, 5 கோடி மதிப்புள்ள சரக்குகளுடன் மாயமாய் மறைந்துவிட்ட 3 கப்பல்களையும் கண்டுபிடித்துத் தருமாறு சிங்கப்பூர் போலீசார் 'இன்டர்போல' என்ற சர்வதேச போலீஸ் உதவியை நாடியுள்ளனர்.

பிரான்சிஸ்தேல் (31 என்ற சிங்கப்பூர் பிரஜை மற்றும் ஒரு பிரபலவர்த்தசர் ஆகியோர் மீதுசிங்கப்பூர் போலீசார் சந்தேகம் தெரிவித்துள்ளனர். தலைமறைவாகி விட்ட அவர்களை போலீசார் தேடிவருகிறார்கள்,

# விக்டோரியா நிறுவன கண்காட்சி

சென்னை, அக். 5- சென்னை அண்ணா சாலையிலுள்ள விக்டோரியா தொழில் நுட்ப நிறுவனத்தில் கண்காட்சி தொடங்கியது. ஓவியம், சிற்பம், சிலை ஆகியவை போட்டிக்கு வந்துள்ளன.

குடிசை வாசிகளுக்கு

# மனைப்பட்டா வீடுகட்ட ரூ. 64 ஆயிரம் கடனுதவி

சென்னை, அக். 5- சென்னை பெரம்பூர் வியாசர்பாடி ஆகிய தொகுதி குடிசை வாசிகள் 64 பேருக்கு மனைப் பட்டா வழங்கப்பட்டது.

தமிழக குடிசை மாற்று வாரியத்தலைவர் என்.வி.என். செல்வம் மனைப் பட்டாக்களை வழங்கி அவர்கள் வீடுகட்டிக் கொள்ள ரூ 64 ஆயிரம் ரூபாய்கடனுதவிகளையும் வழங்கினார்.

குடிசை மாற்று வாரிய உறுப்பினர்கள் எம். வி. ராமன், வ. கோதண்டராமன், அ. ஜார்ஜ், வ. ஆரோக்கியதாஸ், கே. தெய்வசிகாமணி ஆகியோரும் விழாவில் கலந்து கொண்டனர்.

# என். வி. என். செல்வம் நிகழ்ச்சிகள்

சென்னை, அக். 5- தமிழ்நாடு குடிசை மாற்று வாரியத்தலைவர் என்.வி.என். செல்வம் நாளை மாலை 7 மணி அளவில் வட ஆற்காடு மாவட்டம் ராணிப்பேட்டையில் நடைபெறும் கழகப் பொதுக் கூட்டத்தில் கலந்து கொண்டு பேசுகிறார்.

அடுத்தநாள் 7-ம் தேதி காலை 10 மணியளவில் வேலூர் நகராட்சி ஆணையருடன் குடிசைப்பகுதி மாற்று வாரியப் பணி விஸ்தரிப்பு குறித்து அவர் ஆலோசனை நடத்துவார்.

அன்று மாலை (7-10-84) 8 மணிக்கு வேலூரில் நடைபெறும் பொதுக் கூட்டத்தில் அவர் பேசுகிறார்.





சென்னையில் நடைபெற்ற ராஜாதேசிங் 270-வது ஆண்டு விழாவில், பள்ளியிறுதித் தேர்வில் அதிக மதிப்பெண் பெற்ற மாணவ மாணவிகளுக்கு அமைச்சர் டாக்டர் நாவலர் பரிசு வழங்கினார்.

# பஞ்சாபில் மீண்டும் வன்முறை - குண்டு வீச்சில் 2 பேர் மரணம்

சண்டிகர், அக். 5- பஞ்சாபில் பயங்கரவாதிகள் மீண்டும் வன்முறையில் ஈடுபட்டு வருகிறார்கள் ராம்லீலா நிகழ்ச்சியை பார்த்துக் கொண்டிருந்த கூட்டத்தினர் மீது பயங்கரவாதிகள் வெடிகுண்டு வீசியதில் 2 பேர் கொல்லப் பட்டனர் 31 பேர் காயம் அடைந்தனர்.

தனிநாடு காலிஸ்தான் கோரி பயங்கரவாதிகள் பிந்தரான் வாலே தலைமையில் பொற்கோவில் உள்பட சீக்கிய கோவில்களில் ஒளிந்திருந்து வன்முறை வெறியாட்டம் நடத்தியதும் அதனை ராணுவம் அடக்கியதும் தெரிந்ததே.

பொற்கோவிலில் பயங்கரவாதிகளுக்கும் ராணுவத்தினருக்கும் இடையே ஏற்பட்ட போரில் அகால்தக்த் (உருவறை) உள்பட சில பகுதிகள் சேதம் அடைந்தன. அதனை பழுபார்த்த பாபா சந்த் சாகிப் மற்றும் அவரது ஆதரவாளர்களுக்கு பாதுகாப்பு அளிக்கவும்மீண்டும் பயங்கரவாதிகள் பொற் கோயிலை நாசவேலைகளுக்கு பயன்படுத்தாமல் தடுக்கவும் கடந்த ஜூன் மாதம் 5-ந்தேதியிலிருந்து ராணுவம்பொற் கோவிலை பாதுகாத்து வந்தது.

பொற்கோவிலை எங்கள்வசமே ஒப்படைக்க வேண்டும் என்று சீக்கிய மத தலைமை குருமார்கள் அரசை வற்புறுத்தினர்.

## மீண்டும் வன்முறை

அவர்களது கோரிக்கையை ஏற்றுகடந்த செப்டம்பர் 30ந் தேதி பொற் கோவிலை தலைமை குருமார்களிடம் ஒப்படைத்ததோடு, அங்கிருந்து ராணுவம் வாபஸ் ஆகியது.

இதையடுத்து பயங்கரவாதிகள் மீண்டும் வன்முறையில் ஈடுபட்டு வருகின்றனர்.

மதகுருமார்களிடமிருந்து கோவிலை கைப்பற்றி அங்கு காலிஸ்தான் கொடியை பறக்க விட்டனர் உடனே போலீசார் விரைந்து நிலைமையை சரிபடுத்தினர் பலர் கைது செய்யப் பட்டனர். எனினும் பயங்கரவாதிகளின் கொட்டம் அடங்கவில்லை.

நேற்று அதிகாலை பயங்கரவாதியான ஜஸ்பால்சிங் 2 சகாக்களுடன ஜம்மு - காஷ்மீரிலிருந்து பஞ்சாபுக்கு வந்து கொண்டிருந்தான் பதன்கோட்டில அவனை பாதுகாப்பு படையினர் தடுத்து நிறுத்தி விசாரித்தனர். உடனே பயங்கரவாதிகள் துப்பாக்கியால் சுடத் தொடங்கினர் பாதுகாப்புப் படையினர் திருப்பிச் சுட்டதில் ஜஸ்பால்சிங் குண்டு பாய்ந்து செத்தான் அவனது கூட்டாளிகள் இருவரும் தப்பி ஓடி விட்டனர்.

குர்தாஸ்பூர் மாவட்டத்தில கம்பூர் என்னும் இடத்தில் எல்லையை கடந்து இந்திய பகுதிகளுள் நுழையமுயன்ற மூவர்மீது எல்லை பாதுகாப்பு படையினர் சுட்டனர். அதில் ஒருவன்மாண்டான். மற்றவர்கள் தப்பி விட்டனர்.

இவ்விரு சம்பவங்களால் ஆத்திரம் அடைந்த பயங்கரவாதிகள் பாடிண்டா மாவட்டத்தில் மன்சா மண்டி என்னும் இடத்தில் நடந்து கொண்டிருந்த ராம்லீலா நிகழ்ச்சியை பார்த்து ரசித்து கொண்டிருந்த கூட்டத்தினர் மீது வெடி குண்டு வீசினார்கள்.

## ரூ. 10 ஆயிரம் உதவி

ராஜேந்தர்பஹாரி என்ற ஒவ்வரும், 12 வயது சிறுவனும் குண்டுக்கு பலியானார்கள். 31 பேர் காயம் அடைந்தனர் அவர்கள் மன்சாசிவில் ஆஸ்பத்திரி பாடியாலா ராஜேந்திரா ஆஸ்பத்திரி, லூதியானா கிறித்துவ மருத்துவக் கல்லூரி ஆஸ்பத்திரி சண்டிகர் முதுநிலை மருத்துவக் கல்வி கல்லூரி ஆஸ்பத்திரி ஆகியவற்றில் சேர்க்கப்பட்டனர்.

இந்த சம்பவத்தை யொட்டி அரசு ஊழியர்கள் மூவர் உள்பட 7 பேரைபோலீசார் கைது செய்தனர்.

உயிரிழந்தவர்களின் குடும்பத்தாருக்கு தலா ரூ 10 ஆயிரமும் படுகாயம் அடைந்தவர்களுக்கு தலா ரூ. 2 ஆயிரமும் உதவித்தொகை அளிக்கப்படும் என்று பாடிண்டா துணை ஆணையர் ஏ.கே. மிஸ்ரா அறிவித்தார்.

இந்த சம்பவத்தை வன்மையாக கண்டித்த மாநில கவர்னர் கே. டி. சத்தாராவாலா வகுப்பு ஒற்றுமையை கடைபிடிக்குமாறு மக்களைக் கேட்டுக்கொண்டார்.

## மீண்டும் ஜனாதிபதி ஆட்சி

பஞ்சாபில் கடந்த ஆண்டு அக்டோபர் 6-ந் தேதி பிறப்பிக்கப்பட்ட ஜனாதிபதி ஆட்சிஇன்றோடு முடிவடைகிறது. ஆனால் பஞ்சாபில பயங்கரவாதிகள் வன்முறையில் ஈடுபட்டுவருவதையடுத்து ஜனாதிபதி ஆட்சி மீண்டும் நீட்டிக்கப்படலாம் என்று கூறப்படுகிறது. அப்படி ஜனாதிபதி ஆட்சி பிறப்பிக்கப்படும யானால் அடுத்த ஆண்டு மார்ச் மாதம் முதல் வாரம் வரை அமலில் இருக்கும் என்றும் சொல்லப்படுகிறது.

## பாகிஸ்தானில் போர் பயிற்சி

பயங்கரவாதிகளுக்கு பாகிஸ்தான் போர்பயிற்சி அளித்து வருகிறது. இந்த பயிற்சி பஞ்சாப் மற்றும் ராஜஸ்தான் எல்லைப் பகுதிகளில் நடைபெறுகிறது இதற்கான ஆதாரங்கள் கிடைத்துள்ளன என்று மத்திய உள்துறை செயலாளர் எம். கே வால் ஸ்ரீநகரில் கூறினார்.

அண்ணாபவள விழாவையொட்டி

# ஏழை குழந்தைகட்கு இலவச சிகிச்சை

மதுரை, அக். 5- மதுரை பொன்னகரம் 19 வது வட்டம் சார்பில் அண்ணா பவள விழா கூட்டம் நடைபெற்றது.

அச்சமயம் 19வதுவட்ட புரட்சித்தலைவர் நற்பணி மன்றம் சார்பில இலவச மருத்துவ சிகிச்சை அளிக்கப் பட்டது. விழாவிற்கு என். கிருஷ்ணன் தலைமை வகித்தார். வட்ட செயற்குழு உறுப்பினர்சுப்புராஜ் கழக கொடியினை ஏற்றி வைத்து இனிப்பு வழங்கினார்.

தீபாவளி போனஸ்!

# திருவள்ளுவர் போக்கு வரத்து ஊழியர் நன்றி

சேலம், அக். 5- வரலாறு காணாத வகையில் போக்கு வரத்து கழக ஊழியர்களுக்கு தீபாவளி போனஸ் வழங்கியதற்காக திருவள்ளுவர் போக்கு வரத்து கழக அண்ணா தொழிலாளர் சங்கம் (சேலம்) நன்றி தெரிவித்துள்ளது.

முதல்வர் புரட்சித் தலைவர் போக்குவரத்துத் துறை அமைச்சர் முத்துசாமி மற்றும் திருவள்ளுவர் போக்கு வரத்துக்கழக நிர்வாக இயக்குனர் தொழிற் சங்கஅணிமற்றும்பேரவை செயலாளர் ஆகியோருக்கு தொழிற்சங்கம் சார்பில் கிளை சங்கத் தலைவர் எஸ், ஏ அப்துல் சித்திக் நன்றி தெரிவித்துள்ளார்.

குமரி மாவட்டத்தில்

# அண்ணா பவளவிழா கூட்டங்கள்

நாகர்கோவில். அக். 5- குமரி மாவட்டத்தில் கழகத்தின் சார்பில் பல்வேறு இடங்களில் அண்ணா பவளவிழா பொதுக் கூட்டமும், கொடியேற்று விழாவும் சிறப்பாக நடைபெற்றது.

நாகர்கோவில் நகர 12வது வட்ட கிளை கழகத்தின் சார்பில் ஒழுகினசேரி பகுதியில் ஏழு கொடி கம்பத்தில் கொடியை மாவட்ட செயலாளர் அ. தமிழ்மகன் உசேன் கழக கொடி யேற்றினார்.

கொடியேற்று நிகழ்ச்சியில் சட்டமன்ற உறுப்பினர் முத்துகிருஷ்ணன், நகர செயலாளர் ரவீந்திரன், எம். ஜே. பெஷி தர்மராஜ், கணேசன, சேவியர் தனம், ரகீம், சந்திரசேகரன், டென்னிசன், மன்ற தலைவர் கே. பன்னீர் செல்வம், கிருஷ்ணன் மற்றும் பலர் கலந்து கொண்டார்கள்.

கடியபட்டணம் பகுதியில் அண்ணா பவளவிழா பொதுக் கூட்டமும், கொடியேற்று விழாவும் நடைபெற்றது.

நாகர்கோவில், காமராஜபுரம் பகுதியில் நடந்த அண்ணா பவளவிழா பொதுக் கூட்டம் மகளிர் அணியை சார்ந்த செல்லம்மாள் தலைமையில் நடைபெற்றது. கூட்டத்தில் மாவட்ட செயலாளர் தமிழ்மகன் உசேன் கழக கொடியை ஏற்றி வைத்தார்.

மற்றும் சென்னையை சார்ந்த காசிநாதன், சென்னை புரட்சிவாணன் மாவட்ட எம். ஜி. ஆர். மன்ற தலைவர் பன்னீர செல்வம், கிளை செயலாளர் பிரைட், தர்மராஜ், சேவியர் தனம் ஆகியோர் பேசினார்கள்.



சென்னை அண்ணா சாலையில்உள்ள காதி கிராமோத்யோக் பவனில் நடைபெற்ற காந்தி பிறந்ததின விழாவில் கவர்னர்குரானா கதர் விற்பனையை துவக்கி வைத்தார் நிகழ்ச்சியில் அமைச்சர்கள் ஆர் எம் வீ., விஜயலட்சுமி ஆகியோர் பங்கேற்றனர்.

# அண்ணா பவள விழா பேரணிக்குத் திரண்டு வாரீர்

## சேலம் மாவட்ட செயலாளர் கண்ணன் வேண்டுகோள்

சென்னை, அக் 5- சென்னையில் வரும் 7ந் தேதியன்று நடைபெற விருக்கும் அண்ணா பவள விழாப் பேரணியை யொட்டி சேலம் மாவட்ட கழக செயலாளர் பி. கண்ணன் அறிக்கை விடுத்துள்ளார். அதில் அவர்கூறியிருப்பதாவது:-

வரும் 7ந் தேதியன்று சென்னையில் பேரறிஞர் அண்ணா பவள விழாவினை முன்னிட்டு நடைபெற இருக்கும் மாபெரும் பேரணியில் சேலம் மாவட்ட ஒன்றிய நகர-நகரிய செயலாளர்களும், சட்ட மன்ற உறுப்பினர்களும், கழகத்தோழர்களும், எம்.ஜி.ஆர் மன்ற மறவர்களும் எம்.ஜி.ஆர் இளைஞர் அணி வீரர்களும், மாணவர் பிரிவினரும், மகளிர் அணியினரும்,

மாவட்ட விவசாயப்பிரிவு தோழர்களும், தொழிற் சங்க தொண்டர்களும், அலைகடலென பல்லாயிரக்கணக்கில் திரண்டுவருமாறுகேட்டுக் கொள்கிறேன். பவள விழா பேரணிக்கு வரும் பேருந்துகள் அனைத்தும் தலைவாசல் பாலத்திற்கு அருகில் ஒன்றுகூடி 6ந்தேதி இரவு7மணிக்கு சென்னை புறப்படுகிறது. சென்னையில் தோழர்கள் தங்குவதற்குஏற்பாடுகள்செய்யபட்டுள்ளன.

இவ்வாறுகண்ணன் தன் அறிக்கையில்கூறியுள்ளார்.

வடாற்காடு மாவட்டம்

# பள்ளிக்குப்பத்தில் நரிக்குறவர்களுக்கு புதிய குடியிருப்புகள்

வேலூர், அக் 5- வடாற்காடு மாவட்டம், அகரமச்சேரி பள்ளிக்குப்பத்தில் நரிக்குறவர்களுக்கு என அமைக்கப்பட்ட புதிய குடியிருப்புக்கள் திறந்துவைக்கப்பட்டன.

ஏழைஎளியமக்கள்நலன் காக்க புரட்சித் தலைவர் அரசுதொடர்ந்துபல்வேறு நடவடிக்கைகள் எடுத்து வருவது தெரிந்ததே.

வசிக்க இடம் இன்றி ஊர் ஊராகச் செல்லும் நரிக்குறவர்கள் நிலையாக வசிக்கவும் அவர்கள் அடிப் படை வசதிகள் பெறவும் கழக அரசு திட்டங்களை நிறைவேற்றி வருகிறது.

இதன் ஒரு பகுதியாக வடாற்காடு மாவட்டம், அகரமச்சேரி பள்ளிக் குப்பத்தில் 2 லட்சத்து 14 ஆயிரம் ரூபாய் செலவில் கட்டப்பட்டுள்ள 26 குடியிருப்புகள் நரிக்குறவர் குடும்பத்தினரிடம் ஒப் படைக்கப்பட்டது.

நிகழ்ச்சியில் பங்கேற்ற மாவட்டக் கலெக்டர் டானியல், இந்தக் குடியிருப்புகளுக்குமின்சாரம், குடிநீர் சப்ளை அளிக்கப் படும் எனக் கூறினார்.

அதோடு, தொடக்கப் பள்ளி, சத்துணவிற்கான பாலவாடி ஆகியவையும் இங்கு அமையும் எனவும் கலெக்டர் டானியல் அறிவித்தார்.

நரிக்குறவர்களின் குடியிருப்புக்கு காந்தி நகர் என பெயரிடப்பட்டுள்ளது

# தினகரன் பொய் செய்திக்கு மறுப்பு

மதுரை, அக். 5- மதுரை மாவட்டம் உசிலம்பட்டி கழக ஒன்றியம் மாவட்ட பிரதிநிதி கே. ஆர். கலைமன்னன், வெள்ளை மலைப்பட்டி கிளைச் செயலாளர் நா. வி. சின்னதுரை ஆகியோர் எஸ். டி. சோமசுந்தரம் கட்சியில் சேர்ந்து விட்டதாக திமுக ஏடு தினகரனில்வெளியான செய்தி முற்றிலும் தவறானது. என்று கலை மன்னனும் சின்னதுரையும் மறுப்புத் தெரிவித்திருக்கிறார்கள். இந்தப் பொய் செய்திக்கு மறுப்பு தெரிவித்து மாவட்டச் செயலாளர் தலைமை கழகம் உள்பட அனைவருக்கும் தெரிவிக்கப்பட்டுள்ளது.